[23rd September 1961

*Transport (Air conditioned buses for tourists)*

* 1790-c *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Union Government have recommended to the State owned Transport undertaking to provide air conditioned buses at important cities and places of interest for the benefit of tourists?

THE HON. SRI V. RAMAIAH : The Government of India have recommended the provision of air-conditioned buses for the benefit of tourists in the route Madras–Mahabalipuram–Kancheepuram.

SRI A. A. RASHEED : May I know the action taken on this recommendation?

THE HON. SRI V. RAMAIAH : We have no air-conditioned buses now available, but we have informed the Government of India that we will put into use luxury-coach buses.

SRI K. VINAYAKAM : What are the extra facilities that are provided in the luxury-coaches which are not found in the ordinary ones?

THE HON SRI V. RAMAIAH : They are very comfortable and costly buses. The seating accommodation is 33, whereas in ordinary ones, it may range between 56 and 72.

DEPUTY SPEAKER : Questions are over.

**[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

II.—ADJOURNMENT MOTION *re* : ACTION OF POLICE OF TIRUPATTUR, NORTH ARCOT DISTRICT.

DEPUTY SPEAKER : I have received notice of a motion under Rule 42 of the Madras Legislative Assembly Rules, from the hon. Members, Sri M. Kalyanasundaram and Sri V. K. Kothandaraman, for adjournment of the business of the House to discuss a matter of urgent public importance, viz.,

'the action of the police of Tirupattur, North Arcot district, in attacking the people and peaceful satyagrahis causing injuries to many and leaving the arrested Satyagrahis in a forest area 10 miles away to suffer in rain and cold weather '.

The hon. Member, Sri Kalyanasundaram may briefly explain it.

SRI M. KALYANASUNDARAM : கனம் தலைவர் அவர்களே, இப்பொழுது தமிழ் நாட்டு விவசாயிகள் சங்கத்தின் சார்பில் சத்தியாக்கிரகம் அமைதியான முறையில், சாத்வீகமான முறையில், யாருக்கும் இடையூறு இல்லாமல் நடைபெருகிறது. ஆனால் போலீசார் சட்டப்படி எடுக்கும், நடவடிக்கைகள்—சட்டம்கூட எப்படியிருக்கவேண்டும், எந்தச் சட்டத்தின் கீழ் செய்ய வேண்டும் என்பதெல்லாம் வேறு விஷயம்—க்ரிமினல் லா அமெண்ட்மெண்ட் ஆக்ட்படி, அது பெருமையாக இருந்தால் அப்படிச் செய்யட்டும், கைது செய்யட்டும், சிறையில் அடைக்கட்டும். ஆனால், அப்படியும் செய்யாமல், 15, 20 மைல்களுக்கு அப்பால் காட்டிலே இரவு 11, 12 மணிக்கு விட்டு விட்டு, மழை பெய்யும்போதும் பாதுகாப்பில்லாமல்

23rd September 1961] [Sri M. Kalyana sundaram]

விட்டிருக்கிறார்கள். இம்மாதிரி திருப்பத்தூரிலிருந்து மட்டும் புகார் வந்திருக்கிறது. இரண்டு இரவுகளாக அம்மாதிரிச் செய்திருக்கிறார்கள். அது மட்டுமல்லாமல், பொதுமக்களையும், அங்கே கூடியிருக்கக்கூடிய மக்களையும், முன் எச்சரிக்கையும் இல்லாமல், இன்ஸ்பெக்டர் உத்தரவு கொடுக்க, போலீசார் தடிகொண்டு அடித்திருக்கிறார்கள் ; சிலருக்குக் காயம் ஏற்பட்டிருக்கிறது. அதேபோல சங்கரன் கோயிலிலும் அதிகாரிகள் வரம்பு மீறி பொதுமக்களையும், சத்தியாக்கிரகிகளையும், சுவற்றில் மோதி, சாக்கடையில் தள்ளிக் காயப்படுத்தியிருக்கிறார்கள். அமைதியான முறையில் நடக்கும் சத்தியாக்கிரகத்திலும் இம்மாதிரியாகவா போலீசார் நடந்துகொள்ள வேண்டும் ? அரசாங்கம் தூண்டி விட்டதாக நான் சொல்லவில்லை. சில அதிகாரிகளே தங்கள் அதிகார வரம்பை மீறி நடப்பதை விவாதிக்க வேண்டும் என்றுதான் நான் இந்த அவசரப் பிரேரணையைக் கொண்டு வந்தேன். கிட்டத்தட்ட 10,000 சத்தியாக்கிரகிகளுக்கு மேல் இதில் ஈடுபட்டிருக்கிறார்கள் ; அமைதியான முறையில் இது நடக்கிறது. ஆனால், போலீசார் அத்துமீறி நடப்பதால் ஆத்திரம் ஏற்பட்டால், அதனால் வரும் விளைவுகளுக்கு போலீசார்கள்தான் பொறுப்பு. ஆகவேதான் இதை விவாதிக்க வேண்டும் என்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தப் பிரச்னை அவசரப் பிரேரணைக்கு உகந்ததல்ல. தகவல் வேண்டுமென்றால், அவசரக் கேள்வி போட்டால், விசாரித்துத் தகவல் கொடுக்கலாம். (ஸ்ரீ கல்யாணசுந்தரம் : எழுத்து மூலம் கொடுத்திருக்கிறேன், ஸார்.) இருக்கட்டும். "அமைதியான முறையில் நடத்தும் சத்தியாக்கிரகிகளை போலீசார் தாக்கியிருக்கின்றனர், வட ஆர்க்காட்டில்" என்று சொல்கிறார்கள். இப்பொழுது நான் தங்களுக்கு சுருக்கமாகச் சொல்ல விரும்புகிறேன். இதற்கு சத்தியாக்கிரகம், அமைதி என்று பெயர் சொல்லலாம். துராக்கிரகத்தை சத்தியாக்கிரகம், அமைதியானது என்று சொல்லிவிட்டால் மட்டும் அது அமைதியாகிவிடாது, சத்தியாக்கிரகம் ஆகிவிடாது. தஞ்சாவூரில் போலீசார் அடிபட்டார்கள் என்று செய்தியைப் பத்திரிகையில் வந்ததைப் பார்த்தோம். விவரம் கேட்டிருக்கிறேன். ஒன்று தங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். எதற்கு இந்தச் சத்தியாக்கிரகம் ? சில மாதங்களுக்கு முன்பு நிலச்சீர்திருத்த, உச்ச வரம்பு மசோதா இந்த மன்றத்திலே கொண்டுவரப்பட்டது.

SRI M. KALYANASUNDARAM : On a point of order Sir, நாம் இப்பொழுது சத்தியாக்கிரகத்தின் மெரிட்டுகளைப்பற்றிப் பேச வரவில்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதிலிருந்து வந்ததுதான் இது. . .

SRI M. KALYANASUNDARAM : அந்த விதமாகப் பேசுவது. . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எந்தவிதமானாலும் எனக்குப் பேசத் தெரியும்.

SRI M. KALYANASUNDARAM : தங்களுக்குப் பேசத் தெரியும் என்பது எனக்குத் தெரியும்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்த மசோதா அப்பொழுது இந்த மன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டு இந்த மன்றம் அதை பரிசீலனை செய்து அதன் பிறகு பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பியது. பொறுக்குக் கமிட்டியும் இதைப்பற்றி நன்றாகப் பரிசீலனை செய்து அதற்கு சில திருத்தங்கள் செய்து அதை இந்த சபையின் முன் சமர்ப்பித்து அதுவும் இப்பொழுது பரிசீலனையில் இருக்கிறது. அதைப்பற்றிய விவாதம் இப்பொழுது இந்த மன்றத்தில் நடந்துகொண்டிருக்கிறது. அதைப்பற்றி இந்த மன்றம்தான் முடிவு செய்ய வேண்டும். அந்த நிலைமையில் ஒவ்வொரு ஜில்லாவிலும் கலெக்டர் ஆபீஸ் முன் மறியல் செய்வது என்றால் அதன் அர்த்தம் என்ன ? ஒவ்வொரு ஜில்லாவிலும் டெமான்ஸ்ட்ரேஷன் செய்வதில் ஆட்சேபணை இல்லை. நான் எங்கு சென்றாலும் கலெக்டர்கள் இதைப்பற்றிதான்

[Sri M. Bhaktavatsalam] [23rd September 1961

சொல்லுகிருர்கள். செங்கொடியையோ அல்லது வேறு எந்தக் கொடியையோ எந்திக்கொண்டு டெமான்ஸ்ட்ரேஷன் செய்யட்டும் அதைப் பற்றி ஆட்சேபணை இல்லை. கலெக்டர் ஆபீஸ் முன் மறியல் செய்வதன் அர்த்தம் என்ன ? மறியல் எதற்காக செய்வது. இதற்கு மறியல் செய்ய வேண்டிய அவசியமே இல்லை. இந்தச் சட்ட மன்றம் இந்த மசோதாவைப் பற்றி விவாதித்துக்கொண்டிருக்கும்போது இந்தச் சட்ட சபையின் முன்பே மறியல் செய்ய வேண்டியதன் அர்த்தம் என்ன ? நேற்று நான் வந்துகொண்டிருந்தபோதுகூட என்னை சட்டசபைக்கு விடாமல் குறுக்கே நின்று மறித்தார்கள். அதைப்போலவே சட்டசபை அங்கத்தினர்கள் சட்ட சபைக்கு வரும்போதுகூட இப்படி தடுத்திருக்கிருர்கள். அப்படி தடுக்கும்போது போலீஸ்காரர்கள் அவர்களை பிடித்து இழுத்திருக்கிருர்கள். அதற்கு போலீசாரின் பலாத்காரம் என்று அர்த்தமா ? என்னையும் கனம் அங்கத்தினர்களையும் இங்கே வரக்கூடாது என்று சொல்வதில் என்ன அர்த்தம்- இதையெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சி தலைவரே முன்னின்று செய்யச் சொல்லுகிருர். இதை பார்த்துக்கொண்டிருக்க முடியாது. கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்களின் ஆதரவின் பேரில் இப்படி நடக்கிறது. கலெக்டர் ஆபீஸ் முன் மறியல் செய்யும்போதும் இங்கே கனம் அங்கத்தினர்கள் உள்ளே வரும்போதும் தடுத்தால், உள்ளே விடாமல் மறியல் செய்தால் அவர்களை என்ன செய்வது. போலீஸ்காரர்கள் அவர்களைத் தடுக்கிருர்கள். அதற்கு துன்புறுத்துகிருர்கள் என்று அர்த்தமா ? அதிகாரத்தை மீறி ஏதாவது நடந்தால் அதைப்பற்றி புகார் வந்தால் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். ஆகவே இந்தப் பிரச்னைக்கு அவசியம் இல்லை. இது வேண்டுமென்றே நடக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். இந்த மன்றத்தின் உரிமையை எப்பொழுதும் கண்காணிப்பதாகச் சொல்கிற கம்யூனிஸ்டு கட்சித் தலைவரே இம் மன்றத்தின் உரிமை பாதிக்கக்கூடிய வகையில் நடந்துகொள்கிருர்.

DEPUTY SPEAKER : After hearing the Hon. Home Minister I have come to the conclusion that the matter does not involve more than the ordinary administration of law and order. So I rule the motion out of order.

## III.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS FOREST AMENDMENT BILL, 1961.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move :

"That leave be granted to introduce the Madras Forest (Amendment) Bill, 1961."

DEPUTY SPEAKER : The question is—

"That leave be granted to introduce the Madras Forest (Amendment) Bill, 1961".

The motion was put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I introduce the Bill.

DEPUTY SPEAKER : The Bill is introduced.

### (2) THE MADRAS LAND REFORMS (FIXATION OF CEILING ON LAND) BILL, 1960 (L.A. BILL NO. 8 OF 1960) AS AMENDED BY THE JOINT SELECT COMMITTEE—*cont.*

*Clause* 10—cont.

SRI R. SRINIVASA IYER : Yesterday I was talking about clause 10. This clause 10 relates to preparation and publication of draft statement as regards land in excess of the ceiling area.